Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



அன்பு

அன்பை விட மேலானது இந்த உலகில் வேறு எதுவுமில்லை.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

ஒழுக்கம்

ஒழுக்கம் என்ற வார்த்தை பாமர மக்களை ஏமாற்றி மற்றவர்கள் வாழப் பயன்படுத்தும் சூழ்ச்சி ஆயுதமாகி விடக் கூடாது.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை 9-2-83 புதன் வெளியூர் 10-2-83 வியாழன் இதழ்: 112



## புரட்சித்தலைவர் உண்ணாவிரதம்: உணர்ச்சிவசப்பட்டு தீக்குளிக்க முயன்ற வாலிபர்

சென்னை. பிப். 9— இன்று முதல்வர் புரட்சித்தலைவர் உண்ணாவிரதம் இருந்த இடத்தின் முன்பு ஒரு வாலிபர் உணர்ச்சிவசப்பட்டு தன் உடல் முழுவதும் மண்எண்ணை ஊற்றிக்கொண்டு 'மத்திய அரசே தமிழகத்தினரை வாழ விடு, மத்திய அரசே தமிழகத்திற்கு அரிசி காடு' என்று கோஷங்கள் எழுப்பிக்கொண்டு தீக்குளிக்க முயன்றார். உடனே போலீசார் அவரை அந்த இடத்திலிருந்து அகற்றினார்கள்.



## தாய்க்குலம் வாழ்த்து முழக்கமிட - தமிழ்க் காளையர் உரிமைக்குரல் எழுப்பிட

## தமிழர் தம் உரிமை காக்க புரட்சித்தலைவர்

# உண்ணாவிரதம் துவங்கினார்

**சென்னை, பிப். 9- தாய்க்குலம் வாழ்த்திட - தமிழ் இளைஞர்கள் உரிமைக்குரல் எழுப்ப தமிழகத்துக்கு அரிசி தராத மத்திய அரசின் போக்கைக் கண்டிக்கும் வகையிலும், தமிழகத்தின் உரிமையைக் காக்கும் விதத்திலும் அண்ணா நினைவாலயத்தில் முதலவர் புரட்சித்தலைவர் இன்று உண்ணாவிரதம் துவக்கினார்.**

புரட்சித்தலைவர் அண்ணா நினைவகத்திற்கு வந்தபோது பொது செயலாளர் ப. உ. ச. பொருளாளர் செ. மாதவன் ஜேப்பியார், டி.கே. கபாலி ஆகியோர் வரவேற்றனர்.

உண்ணா விரதத்தை துவக்குவதற்காக 9.45 மணிக்கு அண்ணா நினைவகத்திற்கு வந்தபோது கழகத் தோழர்கள் ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, கு. க. செல்வம் தி.நகர் மூர்த்தி, சைதை துரைசாமி, ஜே. பாலன் ஆகியோர் 'தமிழகஉரிமையைக்காக்க உயிரைக் கொடுப்போம்' "புரட்சித்தலைவர் வாழ்க" "அண்ணாபுகழ் ஓங்குக" என்று குரல் கொடுத்தனர்.

புரட்சித்தலைவர் காரை விட்டு இறங்கியதும் பொதுச் செயலாளர் ப.உ.ச. உடன் அண்ணா நினைவகத்திற்கு சென்று மலர் வளையம் வைத்து வணங்கி விட்டு உண்ணா விரத மேடைக்கு வந்தார்.

உண்ணாவிரத மேடைக்கு புரட்சித்தலைவர் வந்தவுடன் பொதுச் செயலாளர் ப. உ. ச. மாலை அணிவித்தார். புரட்சித்தலைவர் 9.50 மணிக்கு உண்ணாவிரதத்தை துவக்கினார். கழகத் தோழர்கள் உரிமைக்கு குரல் கொடுப்போம் என்று முழக்கம் எழுப்பினர்.

புரட்சித் தலைவருடன் கழகப் பொதுச்செயலாளர் ப. உ. ச. உண்ணாவிரத மேடையில் அமர்ந்திருந்தார்.

கழக மேலவை உறுப்பினர்கள் மதுரை முத்தண்ணன், அனகாபுத்தூர் ராமலிங்கம், ஆர். டி. சீதாபதி, டி. கே. கபாலி எம். எல். ஏ. ஆகியோர் மேடைக்கு வந்தபோது அவர்களையெல்லாம் சட்ட மன்றத்திற்கு போகுமாறு புரட்சித்தலைவர் கூறினார்.

உண்ணாவிரத மேடைக்கு அருகே பிரம்மாண்டமான பந்தல் ஒன்று போடப்பட்டுள்ளது.

### ஜக்கையன் அணிவித்த சால்வை

அந்த பந்தலில் ஆயிரக்கணக்கான கழகத்தோழர்களும், தோழியர்களும் காலையிலிருந்தே வந்து குவியத் தொடங்கினர். முதல்வர் புரட்சித் தலைவருக்கு கழக நாடாளுமன்ற உறுப்பினர் ஜக்கையன் சால்வை அணிவித்தார். மேடைக்கு எதிரே பாவலர் முத்துசாமி, லியாகத் அலிகான், அலமேலு அப்பாதுரை, வேலூர் நாராயணன், நூர்ஜகான் ரசாச், வளர்மதி, சென்னை மாவட்ட செயலாளர் ஜேப்பியார் ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, கு.க. செல்வம், வளர்மதி, ஆண்டாள் ரவூத், கஸ்தூரி பாலன் மயிலை தமிழ்மணி, ராஜ்குமார், காஞ்சி பன்னீர்செல்வம், சி. என். விசுவநாதன், சைதை துரைசாமி, பிள்ளைபாக்கம் மூர்த்தி, மற்றும் ஏராளமான கழகத் தோழர்களும் மகளிரும் அமர்ந்திருந்தனர்.

முதல்வர் புரட்சித்தலைவர் உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கியதும் ஏராளமான கட்சித் தொண்டர்கள் சாரி சாரியாக வந்து முதல்வர் புரட்சித்தலைவரை சந்தித்துச் சென்றனர்.

இவர்களில் பெரும்பாலோர் தாய்க்குலத்தினர்.

முதல்வர் புரட்சித்தலைவரிடம் இவர்கள் எலுமிச்சம் பழம் கொடுத்தனர் அறப்போர் வெல்க என்று வாழ்த்து தெரிவித்தனர்

பேரறிஞர் பெருந்தகை அண்ணாவின் குரல் டேப் மூலம் ஒலித்த வண்ணம் இருந்தது

முதல்வர் புரட்சித்தலைவரும், கழகப் பொதுச் செயலாளர் ப. உ. ச. வும் பழைய நம் நாடு பத்திரிகைகளைப் பார்த்துக் கொண்டு இருந்தனர்.

### முதல்வர் புரட்சித்தலைவர் உண்ணாவிரதம்: ஜனதா ஆதரவு

சென்னை, பிப். 9— தமிழகத்துக்கு அரிசி தராத மத்திய அரசின் போக்கைக் கண்டித்து உண்ணா விரதமிருக்கும் முதல்வர் புரட்சித்தலைவரை தமிழக ஜனதா தலைவர்களில் ஒருவரான கலிவரதன் இன்று உண்ணாவிரத இடத்தில் சந்தித்து மாலை அணிவித்தார்.

அத்துடன் முதல்வரிடம் ஒரு கடிதத்தையும் அவர் கொடுத்தார். அந்தக்கடிதத்தில் அவர் கூறியிருப்பதாவது:-

பெரியகுளம் இ. காங்கிரஸ் தோல்விக்குப் பின்னர் மத்திய அரசு தமிழகத்தை மாற்றாந்தாய் மனப்பான்மையுடன் நடத்துவதைக் கண்டித்து தாங்கள் ஏற்றுள்ள காந்திய அறவழிப் போருக்கு எங்களது உளமார்ந்த பாராட்டுக்கள்.

இவ்வாறு அந்தக்கடிதத்தில் கலிவரதன் கூறியிருக்கிறார்.

### தஞ்சையில்

## நோயாளியிடம் ரூ.100 லஞ்சம்: டாக்டர் கைது

தஞ்சாவூர், பிப். 9— தஞ்சை மருத்துவக் கல்லூரி மருத்துவமனையில் நோயாளியிடம் ரூ. 100 லஞ்சம் பெற்ற டாக்டர் ஒருவர் கைது செய்யப்பட்டுள்ளார்.

இந்த டாக்டர் பெயர் கிருஷ்ணமூர்த்தி. இவர் மீது நோயாளி ஒருவர் புகார் கொடுத்தார். ரூ. 500 லஞ்சம் கேட்டதாக அவர் கூறி இருந்தார்

அந்த நோயாளியிடம் இருந்து டாக்டர் ரூ. 100 லஞ்சம் பெற்ற போது கைது செய்யப்பட்டார்.

### ஆந்திராவில்

## ஓய்வுபெறும் வயது குறைப்பு

ஐதராபாத், பிப். 9— ஆந்திராவில் அரசு ஊழியர்கள் ஓய்வு பெறும் வயது 58ல் இருந்து 55 ஆக குறைக்கப்படுகிறது.

இந்த முடிவை ஆந்திர அமைச்சரவை எடுத்துள்ளது.

ஓய்வு வயது குறைப்பு உடனடியாக அமுலுக்கு வருகிறது.

இதனால் 6 ஆயிரம் அரசு ஊழியர்கள் பாதிக்கப்படுவார்கள் என்று கூறப்படுகிறது.

## கற்பனை உலகில் இ. காங்கிரசார் புரட்சித்தலைவர் சூடு

### கருணாநிதிக்கும் பதில்

**சென்னை, பிப். 9- தமது உண்ணா விரதத்தை தேர்தல் ஸ்டண்ட் என்று கூறிய இ. காங்கிரசாருக்கும், தவறான கருத்து வெளியிட்ட கருணாநிதிக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் பதிலளித்தார்.**

முதல்வர் புரட்சித்தலைவர் உண்ணா விரதத்தை துவங்கிய பிறகு நிருபர்கள் அவரை சந்தித்தனர். அப்போது நிருபர்கள் கேட்ட கேள்விக்கு முதல்வர் புரட்சித்தலைவர் அளித்த பதில் வருமாறு:—

நிருபர்:- உண்ணா விரதச் செய்தியை மேலவையில் அறிவித்தீர்கள், அந்த செய்தியை டெலிவிஷனும், ரேடியோவும் ஒலிபரப்பாமல் "பிளாக் அவுட்" (இருட்டடிப்பு) செய்கிறார்களே?

### உண்மைக்கே வெற்றி

முதல்வர் புரட்சித்தலைவர்:— சிப்பை ஒளித்து வைத்து விட்டால் கல்யாணம் நின்று விடுமா? டெலிவிஷனும், ரேடியோவும் இந்த செய்தியை ஒளிஒலிபரப்பாவிட்டால் இந்த உண்மை மறைந்துவிடுமா? மக்களின் உணர்வுகளையே இது மறைப்பதாகும். உண்மை தான் வெல்லும். நீதி மறையாது. வென்றே தீரும்.

நிருபர்: உண்ணா விரதம் இருக்கும் நீங்கள் நாட்டு மக்களுக்கு சொல்லும் செய்தி என்ன?

முதல்வர்:- நேற்று மேலவையில் முழுவதுமாக அரசின் சார்பில் பதிலைச் சொன்னேன். எப்போது எல்லாம் தமிழக அரசு மத்திய தொகுப்புக்கு அரிசி வழங்கி இருக்கிறது என்பதை தேதிவாரியாக எழுதப்பட்ட கடிதத்தின் விவரத்தையும் வெளியிட்டேன். மத்திய தொகுப்புக்கு நாங்கள் 2 லட்சம் டன் அரிசி கொடுக்க முன் வந்ததையும், அதைஅவர்கள் ஏற்றுக்கொள்ளாத நிலையையும் விளக்கினேன், அந்த இரண்டு லட்சம் டன்னில்தான் உணவுக்கு வேலை திட்டத்திற்காக 73 ஆயிரம் டன்னை எடுத்து செலவழியுங்கள் என்று சொன்னார்கள். அதன்படி செலவிட்டோம் அதற்கான பணத்தையும் மத்திய அரசு கொடுத்து விட்டது.

### டில்லியின் வாதம் தவறு

அப்படியானால் அவர்கள் அரிசியை எடுத்துக் கொண்டு நமக்கு விலையைக் கொடுத்து விட்டதாகத்தான் பொருள். மீதி உள்ள அரிசி கெட்டு விடக் கூடாது என்பதற்காக, பொது விநியோக முறையில் விநியோகித்தோம் அதன்பிறகு 3 வருட காலமாக நமக்கு வறட்சி வந்ததால் பற்றாக்குறை ஏற்பட்டு விட்டது. நாம் மத்திய தொகுப்பிற்கு கொடுப்பதற்கு அரிசி இல்லை. நீங்கள் அரிசி கொடுக்கவில்லை. அதனால் நான் கொடுக்க மாட்டேன் என்கிற வாதமே தவறு.

ஒரே நாடு என்பது உண்மையானால் இந்த வாதமே செல்லக் கூடாது இந்த வாதம் அடிப்படை உரிமைப் பாட்டிற்கு

2-ம் பக்கம் பார்க்க

## புரட்சித்தலைவரின் அறப்போர்

# முதல்கட்ட வெற்றி

## பேச்சு நடத்த மத்திய அரசு அழைப்பு

**சென்னை, பிப். 9- புரட்சித்தலைவரின் அறப்போருக்கு முதல் கட்ட வெற்றி கிடைத்துள்ளது. பேச்சு வார்த்தை நடத்த மத்திய அரசு அழைத்துள்ளது.**

இது குறித்து அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் நிருபர்களிடம் கூறியதாவது:-

இன்று காலை 11 மணி அளவில் மத்திய உணவுத்துறை அமைச்சர் ராவ்பீரேந்திரசிங் தமிழகமுதலமைச்சரோடு பேச வேண்டும் என்று கூறினார்.

முதலமைச்சர் உண்ணா விரதம் மேற்கொண்டு இருப்பதால் அவரது தனிச் செயலாளரோடு ராவ் பீரேந்திரசிங் தொலைபேசியில் பேசும் போது தமிழகமுதலமைச்சர் உண்ணாவிரதம் இருப்பது பற்றி தான் வருந்துவதாகவும், முதலமைச்சர் டெல்லி வரும்படியும் அங்கு இந்தப பிரச்சினைப் பற்றி பேசலாம் என்றும் ஆகவே உண்ணாவிரதத்தைக் கைவிடும்படியும் கேட்டுக் கொண்டார்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்

மத்திய விவசாய துறை அமைச்சர் ராவ் பீரேந்திர சிங்கிற்கு முதல்வர் புரட்சித்தலைவர் அனுப்பியுள்ள "டெலக்ஸ்" செய்தியில் கூறியிருப்பதாவது:—

இன்று காலை 11 மணி அளவில் எனது செயலாளருடன் தொலைபேசியில் எனது உண்ணாவிரதத்தைக் கைவிடுமாறு கேட்டுக் கொண்டீர்கள்.

என்னைப்பற்றி அக்கறையுடன் விசாரித்ததற்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். உணவுப் பிரச்சினை குறித்து பேச்சு வார்த்தை நடத்தவும் அது குறித்து. சுமுக முடிவு ஏற்படவும் என்னை டெல்லிக்கு வருமாறு அழைத்துள்ளீர்கள்.

எனது உண்ணா விரதத்தின் நோக்கம் தமிழகத்தின் கடுமையான உணவு நிலையை தங்களின் கவனத்திற்கு கொண்டு வரவும், தமிழகத்தின் சார்பில் கடுமையான வறட்சி குறித்தும், உணவு நிலைமை குறித்தும் தொடர்ந்து பல முறை

(2 ம் பக்கம் பார்க்க)

## கிழக்கு முகவை மாவட்ட ஊழியர் கூட்டம்

மதுரை, பிப், 9— கிழக்குமுகவை மாவட்டம் திருப்புவனம் ஒன்றியம் திருப்பாச் சேத்தியில் கழக ஊழியர் கூட்டம் கிழக்குமுகவை மாவட்ட செயலாளர் பொ. அன்பழகன் எம். பி. தலைமையிலும், ஒன்றிய அவைத்தலைவர் ஏ.கே. சாமி மாவட்டப் பொருளாளர் கருப்பையா, ஒன்றிய செயலாளர் சுல்தான்அலாவுதீன் முன்னிலையிலும் நடைபெற்றது. கழக வளர்ச்சிக்கான ஆக்கப்பணிகள் குறித்து விவாதிக்கப்பட்டன. இதுபோல் திருப்புவனம் ஒன்றியம் மழவராயனேந்தலில் நடைபெற்ற ஊழியர் கூட்டத்திலும் அன்பழகன் எம். பி. கலந்து கொண்டார்.

திருச்செந்தூர்:

## கழக வேட்பாளருக்கு குடியரசு கட்சி ஆதரவு

சென்னை, பிப். 9— திருச்செந்தூர் சட்டமன்ற தொகுதிக்கான இடைத்தேர்தலில் கழக வேட்பாளரை ஆதரிப்பதென இந்திய குடியரசு கட்சி (கவாய் பிரிவு) முடிவு செய்துள்ளது.

இது பற்றிய அறிவிப்பை அக்கட்சியின் தமிழ் மாநில செயலாளர் மூர்த்தி எம். எல். ஏ. வெளியிட்டார். மூர்த்தி தன் அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

தமிழகத்தில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக அரசு தொடர்ந்து நல்லாட்சி நடத்தி வருவதாலும், அக்கட்சியின் பொதுச்செயலாளர் ப.உ.ச. விடுத்த வேண்டுகோளை ஏற்றும் நடைபெறவிருக்கும் திருச்செந்தூர் சட்டமன்ற இடைத்தேர்தலில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக வேட்பாளரை ஆதரிப்பதென இந்தியக் குடியரசுக் கட்சி (கவாய்பிரிவு) முடிவு செய்துள்ளது.

இவ்வாறு மூர்த்தி தன் அறிக்கையில் கூறியிருக்கிறார்.

புரட்சித்தலைவரின் உண்ணாவிரத செய்திக்கு

## இருட்டடிப்பு ஏன்? வானொலிக்கு மார்க்சிஸ்ட் கண்டனம்

சென்னை, பிப், 9. முதல்வர் புரட்சித் தலைவர் உண்ணாவிரதம் இருப்பதாக அறிவித்த செய்தியை இருட்டடிப்புச் செய்த சென்னை வானொலிக்கு தமிழக மார்க்சிஸ்ட் கட்சி கண்டனம் தெரிவித்துள்ளது

மார்க்சிஸ்ட் கட்சியின் தமிழ் மாநில செயலாளர் நல்லசிவம் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:

மிகக் கொடுமையான வறட்சியால் தமிழ்நாடு பாதிக்கப்பட்டுள்ளது. வேலையின்றி தவித்து கிராமங்களிலிருந்து மக்கள் வெளியேறிக் கொண்டிருக்கிறார்கள். கிலோ 5 ரூபாய்க்கு மேல் அரிசி விலை உயர்ந்து கொண்டுள்ளது. குடிநீர் இல்லாமல் மக்கள் பாதிக்கப்பட்டுள்ளார்கள்.

தமிழக மக்கள் இவ்வாறு அல்லல்படும்போது தமிழகத்திற்கு தேவையான அரிசியோ, கோதுமையோ கொடுத்து உதவாமல் கடந்த 8 மாத காலமாக மத்திய அரசு அரக்கத்தனமாக நடந்து கொண்டுள்ளது.

மத்திய அரசின் இத்தகைய போக்கினை கண்டித்து, தமிழகத்தின் உணவுத் தேவையை வற்புறுத்தி தமிழக முதலமைச்சர் எம். ஜி. ஆர். அவர்கள் 9-2-83ம் தேதியன்று உண்ணாவிரதம் இருப்பதற்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தனது ஆதரவினை தெரிவித்துக் கொள்கிறது.

## வறட்சி போக்க நிதி தாரீர்

தமிழ்நாடு கோரும் அரிசியையும், கோதுமையையும் உடனடியாக மத்திய அரசு கொடுத்திட வேண்டுமென்றும், ஒதுக்கப்படும் உணவுப் பொருட்கள் வந்து சேருவதற்கான ரயில்வே வாகன் ஏற்பாடுகள் செய்து கொடுக்கவேண்டுமென்றும், வறட்சி நிவாரணப் பணிகளை துவக்கிட போதுமான நிதியினைக் கொடுக்க வேண்டுமென்றும் வற்புறுத்துகிறோம்.

மாநில முதலமைச்சர் தான் உண்ணாவிரதம் இருக்கப் போவதாக 8—2—83 அன்று மதியம் 12 மணி அளவில் தமிழக சட்டமேலவையில் அறிவித்தார், அன்று பகல், மாலை, இரவு அகில இந்திய, மாநில செய்திகளில் அகில இந்திய வானொலி இந்த செய்தியினை இருட்டடிப்பு செய்தது. இவ்வளவு சூழ்நிலைக்குப் பின்னும் மத்திய அரசின் வஞ்சனைப் போக்கு தொடர்வதை வன்மையாகக் கண்டிக்கிறோம்.

இவ்வாறு நல்லசிவம் தமது அறிக்கையில் கூறியிருக்கிறார்.

## தீ விபத்து பகுதிகளில் சுலோசனா சம்பத்

சென்னை, பிப், 9— தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்று வாரிய தலைவர் சுலோசனா சம்பத்வாரிய அதிகாரிகளுடன் தீ விபத்து ஏற்பட்ட சென்னை தண்டையார்பேட்டை சேணியம்மன் கோவில் தெரு அம்மணி அம்மாள் தோட்டம் பாரதிநகர் ஆகிய இடங்களைப் பார்வையிட்டார்.

இப்பகுதியில் 79 குடும்பங்களும் தீ விபத்தினால் கடைகளும் பாதிக்கப்பட்டன. பாதிக்கப்பட்ட மக்களை நேரில் சந்தித்து சுலோசனா சம்பத் ஆறுதல் கூறினார். அவர்களுக்கு உடனடியாக நிவாரணப்பணிகளை மேற்கொள்ளுமாறு அதிகாரிகளிடம் தெரிவித்தார். அவருடன் அதிகாரிகள் தலைமைப்பொறியாளர், ராதாகிருஷ்ணன் நகர்பகுதி செயலாளர் வே. மோகனசுந்தரம், 3வது வட்டச் செயலாளர் அருணாசலம், மற்றும் ஸ்ரீதரன், சங்கரதாஸ், பெருமாள் மற்றும் கழகத் தோழர்களும் வந்தனர்.

குறிஞ்சிப்பாடி தங்கராசு பேச்சு

## பற்றாகுறை இருந்தும் விவசாயத்திற்கு மின்சாரம் தந்த அரசு

சென்னை பிப்.9. மின்சாரப் பற்றாக்குறை கடுமையாக இருந்த போதிலும் விவசாயத்திற்கு மின்சாரம வழங்கியது கழக அரசு என்று குறிஞ்சிப்பாடி தங்கராசு கூறினார்

சட்டசபையில் கழக உறுப்பினர் குறிஞ்சிப்பாடி தங்கராசு பேசுகையில் கூறியதாவது:-

வடலூரில் 1867ம் ஆண்டு ராமலிங்க வள்ளலார் தர்ம சாலையைத் துவங்கினார். அன்று முதல் இன்று வரை ஏழை எளியவர்களுக்கு அன்னதானம் வழங்கப்படுகிறது.

ஆனால் நம்முடைய புரட்சித்தலைவர் தமிழகம் முழுவதும் சத்துணவு திட்டதை தீட்டி நிறைவேற்றுவதற்கு 112கோடி ரூபாய் அனுமதித்திருக்கிறார்.

மின்பற்றாக்குறையான நேரத்திலும் விவசாயத்திற்கு 6 மணி நேரம் மின்சாரம் வழங்கி வருவது ஏழை எளிய மக்களுக்கு நன்மை செய்யும் அரசு என்பதை காட்டுகிறது.

நாட்டில் எந்த திட்டத்தையும் சிறப்பாக செயலாற்றி வரும் இந்த அரசை இருபது ஆண்டுகள் ஆண்டவர்களும் ஏழரை ஆண்டுகள் ஆண்டவர்களும் பாராட்டும் எண்ணமிருந்தாலும் பாராட்ட மாட்டார்கள். அதனால் தான் முதல்வர் புரட்சித்தலைவர் போற்றுவோர் போற்றட்டும், தூற்றுவோர் தூற்றட்டும், என் கடன் பணி செய்து கிடப்பதே என்று ஏழை எளியவர்கள் ஏற்றம் பெறும் வகையில் பாடுபடுகிறார்.

கிராமப் புறங்களில் உள்ள ஏரிகளை, 200 ஏக்கருக்கு உட்பட்ட ஆயக்கட்டுகளை ஆழப்படுத்தி ஒரு போகம் விவசாயம செய்வதற்கு தண்ணீர் தேங்கும் வகையில் நடவடிக்கை எடுக்க வேண்டும். இவைகளை வறட்சி நிவாரணப் பணியில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

கிராமப் புறங்களில் சிறு விவசாயிகள் சமம் பாட்டிற்காக நிலத்தடி தண்ணீரை குழாய்கிணறுகள் மூலமாக விவசாயம செய்ய ஏற்பாடு செய்து தர வேண்டும்.

இவ்வாறு குறிஞ்சிப்பாடி தங்கராசு கூறினார்,

மீனாட்சி கோயில்

## தக்காராக சிதம்பரம் நியமனம்

மதுரை, பிப். 9— மதுரை மீனாட்சி கோயிலின் அறங்காவலர் குழுவின் பதவிக்காலம் 4-ந தேதியுடன் முடிவடைந்தது. புதிய அறங்காவலர் குழு நியமிக்கப்படாத நிலையில் ஆலய அறங்காவலர் குழுவின் கடமைகளை செய்வதற்காக இதுவரை அக்கோவில் அறங்காவலர் குழுதலைவராக இருந்த வி. என். சிதம்பரத்தை தக்காராக நியமித்து அரசு உத்தரவிட்டுள்ளது.

## மோரீஸ் பிரதமர் சென்னை வருகை

சென்னை, பிப். 9— மோரீஸ் நாட்டு பிரதமர் ஜெகநாத் நாளை இரவு விசேஷ விமானம் மூலம் சென்னை வருகிறார். வெள்ளிக் கிழமை (11ந் தேதி) காலை முதல்வர் புரட்சித்தலைவர், மோரீஸ் பிரதமர் சந்திப்பு கவர்னர் மாளிகையில் நடைபெறுகிறது. பின்னர் மோரீஸ்பிரதமர் அசோக் லேலண்ட் தொழிற்சாலையைப் பார்வையிடுகிறார். பிற்பகல் விமானம் மூலம் திருப்பதி செல்கிறார்,

தன்னிறைவுத் திட்டத்தை நிறைவேற்ற

## 20 நகர சபைகளுக்கு ரூ. 200 லட்சம் உதவி: அரசு நிதி ஒதுக்கீடு

திருச்சி. பிப். 9- தன்னிறைவுத் திட்டத்தை நிறைவேற்ற 20நகரசபைகளுக்கு தமிழக அரசு ரூ 200 லட்சம் நிதி ஒதுக்கீடு செய்துள்ளது.

இந்த நகரசபைகள் பொருளாதாரத்தில் பலவீனமாக உள்ளதாகும்.

முதல்வர் புரட்சித் தலைவர் அரசு இந்தியாவிலேயே முதன் முதலாக தமிழகத்தில் தன்னிறைவுத்திட்டதை அமல்படுத்தத் துவங்கியது.

இதன் முதல் கட்டமாக பஞ்சாயத்து ஒன்றியங்களில் 3 கட்டமாக இந்த திட்டம் அமல் படுத்தப் பட்டு விட்டது.

இதன் அடுத்த கட்டமாக இந்த தன்னிறைவுத் திட்டம் நகரசபைகளுக்கும் விஸ்தரிக்கப்பட்டுள்ளது.

இந்த திட்டத்தைநிறைவேற்றி வைக்க பொருளாதாரத்தில் நலிவு நிலையில் உள்ள நகரசபைகளுக்கு நிதி உதவ அரசு நிதி ஒதுக்கியுள்ளது.

20 நகர சபைகளுக்கு ரூ. 200 லட்சத்தை அரசு அனுமதித்துள்ளது.

செங்கற்பட்டு மாவட்டத்தில் திருவள்ளூர், காஞ்சிபுரம், வட ஆற்காடு மாவட்டத்தில் வாலாஜாபேட்டை, வாணியம்பாடி, தென் ஆற்காடு மாவட்டத்தில் திண்டிவனம், விருத்தாச்சலம், தர்மபுரியில் கிருஷ்ணகிரி ஆகிய நகர சபைகளுக்கு இந்த நிதி உதவி கிடைக்கும்.

## ப்ளஸ் டூ தேர்வு ஏப்ரல் 4ந்தேதி துவங்குகிறது

சென்னை, பிப். 9— தமிழ்நாட்டில் மேல் நிலைப்பள்ளி (பிளஸ்டு) தேர்வு ஏப்ரல்மாதம் 4-ந் தேதி தொடங்குமென அறிவிக்கப்பட்டுள்ளது 4 ந் தேதி தொடங்கும் இந்தப் பரீட்சை ஏப்ரல் 29-ந் தேதி முடிய நடைபெறும்.

தனியாக இந்தப் பரீட்சை எழுதும் மாணவர்கள் ஹால் டிக்கெட்டுகளை அவர்கள் மனுவில் குறிப்பிட்டுள்ள இடங்களிலிருந்து பரீட்சை தொடங்குவதற்கு 5 நாட்களுக்கு முன்னதாக பெற்றுக் கொள்ள வேண்டும். ஹால் டிக்கெட்டுகளை நேரில் தான் பெற்றுக்கொள்ள வேண்டும். தபாலில் அனுப்பப்படமாட்டாது. இந்தப் பரீட்சை முடிந்ததும் பிரைவேட் மாணவர்களுக்கான பிராக்டிகல் தேர்வு நடைபெறும் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

# சென்னையில் மருத்துவ பல்கலைக் கழகம்: அண்டே தகவல்

சென்னை, பிப். 9- சென்னையில் மருத்துவப் பல்கலைக் கழகம் ஒன்றை அமைக்க அரசு தீவிரமாக பரிசீலித்து வருகிறது என அமைச்சர் டாக்டர் அண்டே தெரிவித்தார்.



சட்டசபையில் கழக உறுப்பினர்கள் வி. பி. பாலசுப்ரமணியன், இரா. தாமரைக்கனி, தி.மு.க. திருவேங்கிடம் ஆகியோரின் கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் டாக்டர் எச்.வி. அண்டே கூறியதாவது:-

தமிழ்நாட்டில் மருத்துவப் பல்கலைக் கழகம் அமைக்கும் கருத்து அரசின் தீவிர பரிசீலனையில் உள்ளது. சென்னையில் அடையாறு அருகே 130 ஏக்கர் இடம் இருக்கிறது. இந்தியாவில் வேறு எங்கும் இப்படி மருத்துவப் பல்கலைக்கழகம் இல்லை.

இது அமைக்கப்படுவதற்காக தொடராச் செலவு 5 கோடியே 60 லட்ச ரூபாயும் தொடரினச் செலவு ஒரு கோடியே 11 லட்ச ரூபாயும் ஆகும்.

இவ்வாறு அமைச்சர் டாக்டர் அண்டே கூறினார்.

சட்டசபைக் கூட்டத்தையொட்டி

## பிப். 12-ந்தேதி தலைமைச் செயலக அலுவலகங்கள் வேலை செய்யும்

சென்னை, பிப். 9— தமிழக சட்டசபைக் கூட்டம் நடைபெற்று வருவதால் இம்மாதம் 12-ந்தேதி இரண்டாவது சனிக்கிழமை தலைமைச் செயலகத்தின் அனைத்துத் துறைகளும், துறைத் தலைமை அலுவலகங்களும் வேலை செய்யும்.

இதற்கு பதிலாக இம்மாதம் 19-ந்தேதி சனிக்கிழமை இந்த அலுவலகங்களுக்கு விடுமுறை அளிக்கப்பட்டுள்ளது என்று அரசு குறிப்பு ஒன்றில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

## தேர்தலை எதிர்த்து கலவரம்: அசாமில் முப்பது பேர் சாவு

கவுகாத்தி. பிப். 9- அசாமில் தேர்தல் நடத்துவதை எதிர்த்து நடந்துவரும் கலவரம் தொடர்பாக நடந்த துப்பாக்கிச் சூட்டில் நேற்று 11 பேர் இறந்தனர். இதுவரை துப்பாக்கிச் சூட்டிற்கு பலியாகி 30 பேர் இறந்துள்ளனர்.

அசாம் மாநிலத்தில் உள்ள வெளி நாட்டினர் பிரச்சினைக்கு தீர்வு காணாமல் தேர்தல் நடத்தக்கூடாது என்று போராட்டம் நடந்து வருகிறது. அரசாங்க ஊழியர்களும் ஒத்துழையாமை இயக்கம் நடத்தி வருகிறார்கள்.

இதற்கிடையில் திட்டமிட்டபடி வரும் 14, 17, 20 ஆகிய தேதிகளில் தேர்தல் நடக்குமென மத்திய அரசு அறிவித்துஉள்ளது.

காமரூப் மாவட்டம் பெல்சார் கிராமத்தில் உள்ள போலீஸ் நிலையத்தை நேற்று போராட்டக்காரர்கள் கல் வீசித் தாக்கினர். கூட்டத்தைக் கலைக்க போலீசார் கண்ணீர்புகை குண்டுகளை வீசினர். அது பலனளிக்காமல் போகவே போலீசார் துப்பாக்கிச்சூடு நடத்தினர். இந்தத் துப்பாக்கிச் சூட்டில் 11 பேர் இறந்தனர். பலர் காயமடைந்தனர். இந்த தாக்குதலில் போலீசாரும் காயமடைந்தனர். காமரூப் மாவட்டத்திலேயே பரமா என்ற இன்னொரு இடத்திலும் துப்பாக்கி சூடு நடைபெறறது.

ஜோர்காட் என்ற இடத்தில் வாக்குச் சாவடியை பார்வையிடுவதற்காக ஒரு மாஜிஸ்திரேட் சென்றபோது அவரை ஒருகும்பல் தாக்க முயற்சித்தது. இவரை காப்பாற்ற போலீசார் துப்பாக்கிசூடு நடத்தினர்.

நேற்று 4-வது நாளாக அரசு அலுவலகங்களிலும் பாங்குகளிலும், தபால் நிலையங்களிலும் வேலைகள் பாதிக்கப்பட்டன. மரப்பாலங்கள் தீவைத்து கொளுத்தப்பட்டன. பஸ் போக்குவரத்தும் பாதிக்கப்பட்டது.



தமிழக பரிசுச் சீட்டில்

## ஒரே எண்ணில் இரண்டு சீட்டுகளா? நாவலர் மறுப்பு

சென்னை, பிப். 9. தமிழக அரசு பரிசுச் சீட்டில் ஒரே எண்ணில் இரண்டு சீட்டுக்கள் இருந்ததாக 'தினகரன்' வெளியிட்ட செய்தி பொய்யானது என்று அமைச்சர் நாவலர் கூறினார்.

சட்ட மேலவையில் கேள்வி நேரத்தின் போது தமிழக 68-வது பரிசு சீட்டு குலுக்கலில் ஒரே எண்ணில் 2 சீட்டுகள் கண்டு பிடிக்கப்பட்டதாகவும் அந்த செய்தி தினகரன் பத்திரிகையில் வந்திருப்பதாகவும் மீனாட்சிசுந்தரம் கேள்வி ஒன்றை எழுப்பினார். அது பற்றி அரசு என்ன நடவடிக்கை எடுத்தது என்பது பற்றியும் கேட்டார்.

இதற்கு பதிலளித்து நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறியதாவது:-

68-வது குலுக்கல் சீட்டில் ஒரே எண்ணுடைய இரண்டு சீட்டுகள் வெளியிடப்படவேயில்லை. அதுபற்றிய செய்தி தினகரனில் வந்திருப்பதாக உறுப்பினர் கூறினார்.

### பொய் தகவல்

அது பொய்யான தகவல் உண்மைக்கு புறம்பானது. ஐ. ஏ. 645363 என்ற சீட்டு ஒரே சீட்டு தான். அந்தசீட்டை வாங்கியவர் கே. சோமசுந்தரம் அந்த சீட்டுக்கு பரிசு ஏதும் விழவில்லை. கோவை மாவட்ட ஆட்சித்தலைவர் இது பற்றி விசாரித்து அறிக்கை அனுப்பியுள்ளார்.

அப்படிப்பட்ட சம்பவம் ஏதுமில்லை. என்று தகவல் தெரிவித்திருககிறார். 2 சீட்டுகள் ஒரே எண்ணில் அச்சிடப்பட்டதாக புகார் ஏதுமில்லை.

தமிழக அரசு பரிசுச் சீட்டுகள் தனியார் அச்சகத்தில் அச்சிடப்படவில்லை. அரசு அச்சகத்திலேயே அச்சிடப்படுகின்றன. எல்லா கட்டங்களிலும் அரசு அதிகாரிகள் கண்காணிப்புடன் இருந்து நூற்றுக்கு நூறு சதவீத பரிசோதனை நடத்திய பின்னரே பரிசு சீட்டுகள் விற்பனைக்கு அனுப்பப்படுகின்றன.

இதற்கு முன்னதாக கருவூலங்களிலும் நூற்றுக்கு நூறு சதம் பரிசோதனை செய்யப்பட்டு தவறேதும் இல்லை என்ற சான்றிதழ் கொடுத்த பின்னரே வெளியிடப்படுகின்றன.

சங்கரலிங்கம்:- பிற மாநிலங்களிலிருந்து தமிழகத்தில் விற்பனையாகும் பரிசுச் சீட்டுகள் தடை செய்யப்படுமா?

நாவலர்:- வேறு மாநிலங்கள் பரிசு சட்டுகள் தமிழகத்தில் விற்பனை செய்யப்படுகின்றன. தமிழகத்துடன் உடன்பாடு வைத்துக் கொண்ட பிற மாநிலங்கள் பரிசு சீட்டுகள் மட்டுமே இங்கு விற்பனை செய்யப்படுகின்றன என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மதிய உணவு திட்டத்திற்கு பயன்படும் வகையில் பரிசு சீட்டு நடத்தலாம் என்பது பற்றி முதல்வர் புரட்சித் தலைவர் யோசனை கூறியுள்ளார்.

அதுபற்றி அதிகாரிகள் ஆராய்ந்துவருகிறார்கள்.

டாக்டர் ஜனார்த்தனம்:— பரிசு சீட்டுகளின் எண்களை பெரிய எழுத்தில் அச்சிட அரசு முன் வருமா?

நாவலர்: இப்போதைய திட்டத்தில் எந்தவித புகாரும் இல்லை.

இவ்வாறு நிதியமைச்சர் நாவலர்கூறினார்.



அமைச்சர்பண்ருட்டியார் தகவல்

## மத்திய அரசு அனுமதி இல்லாததால்மின்வசதி பெறாத கிராமங்கள்

சென்னை, பிப். 9- மத்திய அரசு அனுமதி இல்லாததால் கொல்லிமலை கிராமங்கள் மின் வசதி பெற முடியவில்லை என்ற தகவலை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் வெளியிட்டார்.

சட்டசபையில் கழக உறுப்பினர் சேந்தமங்கலம் சிவப்பிரகாசம் கேள்விக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:

கொல்லிமலையிலுள்ள 253 குக்கிராமங்களில் 5 குக்கிராமங்களுக்கு மட்டும் தான் மின்வசதி அளிக்கப்பட்டுள்ளது.

மற்றவைகளுக்கு மின் வசதி அளிக்க வேண்டுமானால் காடுகளுக்கிடையே கம்பித்தொடர் இழுத்துச் செல்லவேண்டும்.

காடுகளில் கம்பித் தொடர் இழுக்க மைய அரசின் வனத்துறை சட்டம் இடம் தரவில்லை. மைய அரசின் அனுமதி தேவைப்படுகிறது.

இப்போது வேறு வகையில் யோசனை செய்து ஆங்காங்குள்ள குக்கிராமங்களுக்கு டீசல் ஜெனரேட்டர்களை அரசு செலவில் அமைத்துக் கொடுத்து மின்சார வசதி அளிக்கப்பட உள்ளது.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

## தன்னிறைவு திட்டம் பற்றிய திரைப்படம்

சென்னை. பிப். 9— தன்னிறைவு திட்டம் பற்றிய திரைப்படம் எடுக்கப்பட்டுள்ளதாக அமைச்சர் குழந்தைவேலு தெரிவித்தார்.

சட்டசபையில் கழக உறுப்பினர் எஸ். டி. உக்கம்சந்த் கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர்குழந்தைவேலு கூறியதாவது:—

தன்னிறைவுத் திட்டப் பணிகள் பற்றிய செய்தி படம் தயாரிக்கப்பட்டுள்ளது. இது 144 மீட்டர் நீளமுள்ளதாகும். 180 பிரதிகள் எடுக்கப்பட்டு தமிழகமெங்கும் திரையிடப் பட்டுள்ளது.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.



கழகக்கொடியேற்று விழா:

## சுலோசனா சம்பத் பங்கேற்பு

சென்னை, பிப். 9— சென்னையில் மயிலைத் தொகுதியில் எம்.ஜி.ஆர். மன்றங்களின் சார்பில் கழகக்கொடியேற்று விழா நடைபெற்றது. குடிசை மாற்று வாரியத்தலைவர் சுலோசனாசம்பத் கலந்து கொண்டு பல்வேறு இடங்களில் கழகக்கொடியினை ஏற்றிவைத்தார். 149-வது வட்டம் மகாத்மாகாந்தி நகரில் கல்வெட்டு திறப்பு விழாவும் கழக கொடியேற்று விழாவும நடந்தது.

133-வது வட்டம் வணையம்பதியில் மன்ற திறப்பு விழா கழகக் கொடியேற்று விழா கல்வெட்டு திறப்பு விழா ஆகியவையும் நடைபெற்றன.

இந்த நிகழ்ச்சிகளில் ஐசரிவேலன், மந்தவெளி நடராசன், கே.வி. எத்திராசன், கே.வி. சிவாரங்கன், ராஜி ராதாகிருஷ்ணன், சுப்பிரமணியன், வேதகிரி, வி.கே. விஜயன், குள்ளவேலு, நெல்லை சுப்பையா, பழனிவேலு, இளவழகன் குமார், விநாயகம், திருமதி விஜயா, மாணிக்கம் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.






Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029

Editor: E. PARASURAMAN